உ

திருச்சிற்றம்பலம்

ஸ்ரீ ஞானப்பிரகாச பட்டாரகர் அருளிய

# சிவபூசை அகவல்



திருஅச்சிறுபாக்கம்

சிவபூசா துரந்தரர் மகாநாட்டில்

அன்பர்களுக்கு வழங்கப்பெற்றது.

27—6—58

27-5

உ

திருச்சிற்றம்பலம்

ஸ்ரீ ஞானப்பிரகாச பட்டாரகர் அருளிய

# சிவபூசை அகவல்

———◆———


கும்பகோணம், நகராட்சி உயர்நிலைப்பள்ளித்

தமிழாசிரியர்

வித்துவான் சு. சுவர்ணகாளிச்சுரன் அவர்களால்

பதிப்பிக்கப்பெற்றது




❋


கயப்பாக்கம், உயர்சைவத்திரு

K. முத்துலிங்க ரெட்டியார் அவர்களால்

வெளியிடப்பெற்றது

27—6—58

உ

திருச்சிற்றம்பலம்

# சிவாலய மான்மியக் கோவை

புரந்தனை எரிக்க ரதந்தனில் ஏறும்
பொழுதினில் அச்சிறுஞ் செயலால்
அரியவத் தலத்திற்கு அச்சிறு பாக்கம்
எனும்பெயர் அமைத்ததில் அமரும்
கரந்தனில் மழுவாய்! பாகபு ரேசா!
கருதருஞ் சுந்தரநா யகியாய்!
சிரந்தனில் கங்கை அணிந்த செஞ்சடையாய்!
செல்வமே! கருணை வாரிதியே.

திருச்சிற்றம்பலம்

27-5

உ

செந்திலாதிபன் துணை

# பதிப்புரை

செக்கர் வார்சடைச் சிவபிரான் திருவருள் செய்யத்
தக்கவாய் மையினுயிர்க் கெலாந்தன் னிடத்திருந்து
மைக்கணெம் பெருமாட்டி எண்ணான்கு அறம்வளர்க்கும்
தொக்கமாப் புகழ் படைத்தது தொண்டை நந்நாடு

என்பது மாதவச் சிவஞான மாமுனிவரது அருமைத் திருவாக்கு. இத்தகைய தொண்டைநந்நாட்டில்சைவசமய குரவர்களால் பாடப்பெற்ற தலங்கள் முப்பத்திரண்டு. அவற்றுள் ஒன்ருக விளங்குவது அச்சிறுபாக்கம் என்னும் திருத்தலமாகும். சிவபிரான் முப்புரம் எரித்தற் பொருட்டுத் தேவர்கள் அமைத்த தேரின் மேல் அடியிடலும் அச்சுமுறிந்து போயிற்று. அச்சு இற்ற காரணத்தால் அது நிகழ்ந்த இடம் அச்சிறுபாக்கம் எனப்பட்டது. கண்ணுவரும் கௌதமரும் இத்தலத்தில் வந்து பூசித்து வரம் பெற்றனர். மூலத்தானத்தில் இருக்கும் மூர்த்தி ஆட்சிநாதராவர். தேவியார் இளங்கிள்ளியம்மை. சந்நிதி வடச் சுற்றில் இருக்கிறது. அச்சுற்றிலேயே தலவிருட்சமாகிய கொன்றை மரமும் தீர்த்தங்களில் ஒன்ருகிய சிம்மக்கிணறும் இருக்கின்றன. மற்றும் சங்கு தீர்த்தம் தேவதீர்த்தம் என்னும் தீர்த்தங்களையும் இத்தலம் பெற்றிருக்கிறது. "அச்சிறுபாக்கமதாட்சிகொண்டாரே" எனப்பாடல்

தோறும் முடியும் திருப்பதிகத்தால் திருஞானசம்பந்தப் பெருமான் இத்தலத்தை புகழ்ந்து துதிக்கின்றூர்.

இத்தகைய திருத்தலத்தில் நிகழும் அறுபத்துமூவர்—சேக்கிழார் உற்சவ மூர்த்திகளது பிரதிட்டை நடைபெறும் இவ்விழாவில் மாநாடு தோறும் தலைமை தாங்கிச் சிவபூசைச் செல்வர்களுக்குத் திருவருள் மொழியமுதை வழங்கி அகமகிழ்ந்து வரும், பழனி சைவசித்தாந்த சரபம் சித்தாந்த மகா மகோபாத்தியாய, சிவாகமஞானபானு, சிவஸ்ரீ ஈசானசிவாச்சாரிய சுவாமிகள் தனித்தலைமையில் அவர்களது அருமைச் சீடரும் "நகமெலாம் தேயக்கையால் நாண்மலர் தொழுது தூவி முகமெலாம் கண்ணீர் வார முன்பணிந்துஏத்தும்" தொண்டரும் ஆகிய சிவபூஜா துரந்தரர் வள்ளல் தேவகோட்டை சேவு. மெய்யப்ப செட்டியாரவர்கள் முதலிய பெருமக்களது பேருக்கத்தினுல் நிகழும் மாகாணச் சிவபூசாதுரந்தரர் மகாநாட்டில் அன்பர்களுக்கு வழங்கப்பெறும் இந்நூலின் பெயர் சிவபூசை அகவல் என்பதாம்,

இதன் ஆசிரியர் திருவாரூரில் வாழ்ந்தருளிய கமலை ஞானப்பிரகாசர் என்னும் பெரியார் ஆவார். சிக்கல் நவநீதப்பெருமாள் கோவில் கருப்பக்கிரகத்திலுள்ள கிருஷ்ண தேவராயர் காலத்துக் கல்வெட்டில் "திருவாரூர் ஞானப்பிரகாச பண்டாரத்தை பரதேசிமுத்திரையும் கணக்கெழுத்தும் அமைத்துக் கொள்ளும்படி செய்வித்து அதன் பொருட்டு சர்வமானியம் அளித்த" செய்தி கூறப்படுகிறது. இக்கல்வெட்டில் குறிப்பிடப்படுபவர் இந்நூலாசிரியராகிய கமலை ஞானப்பிரகாசராவார். ஆகவே இந்

நூலாசிரியர் காலம் 16ம் நூற்ருண்டின் பிற்பகுதி என்பது துறுதி.

இந்நூல் சிவாகமத்தில் உள்ள கருத்துக்களைக் கூறுவது என்பதையும், உலகநாயகன் என்னும் நற்றவப் பெரியார் சிவபூசை முறைமையினை தமிழில் அகவற்பாவினுலே செய்து தரவேண்டுமென்று கேட்க, அதன்படி கமலை ஞானப்பிரகாசர் இந்நூலைச் செய்தார் என்பதையும் "பூசனை முறைமையைச் சொற்றமிழகவலில் சொல்ல வேண்டுமென, நற்றவ உலகநாயகன் விளம்ப சிற்குணன் உரைத்த சிவாகம நோக்கி, நற்கமலையில் வாழ்ஞானப்பிரகாசன் சொல்லியபூசைத்தொகை" எனவரும் அடிகளால் உணரலாம்.

இவ்வாசிரியரது அருமைச்சீடர்கள் தருமையாதீன ஸ்தாபகர் ஸ்ரீ-ல-ஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகளும் திருவொற்றியூர் ஸ்ரீலஸ்ரீ ஞானப்பிரகாசர் போன்ற பெருமகான்களும் ஆவார்கள்.

இவ்வாசிரியர் கிரியா பாதத்திற்கு இந்நூலையும் சரியா பாதத்திற்கு சைவானுட்டான அகவல்புட்பவிதி. போன்ற நூல்களையும் யோகபாதத்திற்கு பிராசாதமாலை என்ற நூலையும் ஞானபாதத்திற்கு சிவானந்த போதம் அத்துவாக்கட்டளை முதலிய நூல்களையும் மற்றும் திருவாரூர் பள்ளு திருவானைக்காப் புராணம் திருமழபாடிப் புராணம் ஆகிய நூல்களையும் செய்து சைவ உலகத்திற்குத் தந்துள்ளார்கள்.

இவர் தனது தென்னாட்டுயாத்திரையில் காளையார் கோவில் என்னும் தலத்தில் இருந்த சமணர்களை வென்று அங்குள்ள மக்களைப் பஞ்சத்தினின்றும் காக்க மழை பெய்வித்த செய்தியும், மற்றும் இவர்செய்த பலவித சித்துக்களையும், இறுதியில் திருவாரூரில் சிதம்பரநாதன் கொல்லை என்ற இடத்தில் ஐப்பசி மாதம் கிருட்டிண பட்ச சஷ்டியில் இறைவன் அடியை அடைந்திட்ட வரலாற்றையும் ஞானப்பிரகாச மான்மியம் என்னும் நூலில் காணலாம்.

சைவானுட்டான அகவல் என்னும் இந் நூலின் பழைய ஏட்டுப்பிரதி எனது அருமைத்தந்தையார் காளை யார்கோவில் தேவாரம், உயர்திரு சுப்பையா பிள்ளை அவர்களிடத்தில் இருந்தது. அப்பிரதியோடு சென்னைப் பல்கலைக்கழக கீழ்த்திசை கையெழுத்து நூல் நிலையத்தி லிருந்த இரண்டு ஏட்டுப்பிரதியையும்வைத்துஒப்புநோக்கி 1911ல் மயிலை சுந்தரமுதலியாரவர்கள் வெளியிட்ட பிரதியையும் வைத்துக்கொண்டு, இந்நூலைச் செப்ப னிட்டுப் பதிப்பித்துள்ளேன். தக்க இடங்களில் தலைப் பிட்டுக்காட்டி சில அடிக் குறிப்புக்களையும் குறித்துள் ளேன். காலச்சுருக்கத்தில் வெளிவரும் இந்நூலில் குற்றங் களைந்து குணம் பெய்து பாராட்ட வேண்டுகின்றேன்.

இந்நூலை அன்பர்களுக்கு அன்பளிப்பாக வழங்க முன்வந்த பெரியார் கயப்பாக்கத்தில் சிவநேயச் செல்வ ராகவும்,சிறந்ததருமபரிபாலராகவும், ஏழைமாணவர்கட்கு அன்புத் தந்தையாகவும் திகழ்ந்த முத்துகுமரப்ப ரெட்டி யாருக்கும், சிங்காரத்தம்மாளுக்கும் அருமைப் புதல்வ ராகப்பிறந்த திரு K.M. முத்துலிங்க ரெட்டியாரவர்களா

வார்கள். இவர்கள் மகா இலக்குமி என்னும் பெயரையே தனக்து இயல்பாகப் பொருந்தப் பெற்ற துணைவியோடு சதாகாலமும் இதுபோன்ற சிவப்பணிகள் செய்வதிலேயே கண்ணும் கருத்தும் உடையவராகத் திகழ்ந்தும் மதுராந்தகம் இந்து உயர்நிலைப்பள்ளியின் கமிட்டியிலும் அங்கம் வகித்தும் ஆவனசெய்கின்றார்கள். இப்பொழுது நிகழும் கும்பாபிடேகக்கமிட்டியிலும் தலைவராகத் திகழ்ந்து சிறப்புடன் நடத்தித்தருகின்றார்கள். இவர்களது இளவலாகிய திரு முத்துமல்லா ரெட்டியாரவர்களும் புலப்பாக்கம் எஸ்டேட் திரு P. முத்துவெங்கடபதி ரெட்டியார் அவர்களுக்கும், சிவகாமி அம்மாளுக்கும் அன்புப்புத்திரராகச் சென்று சிவப்பணியையே சதாகாலமும் சிந்தித்துக் கொண்டிருக்கிறார்கள். ஸ்ரீ முத்துபாபு ரெட்டியார் அவர்களும் இத்தகையவரே. இந்தச் சிறந்த குடும்பம் மேலும் மேலும் சிறக்க எல்லாம் வல்ல முருகப்பெருமானை வேண்டுவதல்லது வேறுயாது கைமாறு செய்ய இயலும். ஸ்ரீ முத்துலிங்க ரெட்டியார் அவர்களின் அரும்பணிக்குச் சைவ உலகம் என்றும் கடப்பாடுடையது.

ஆலயங்களில் இத்தகைய மகாநாடுகள் நடைபெற ஊக்குவிக்கும் சென்னை அறநிலையப் பாதுகாப்புக் கழக ஆணையாளர் உயர்சைவத்திரு உத்தண்டராமப் பிள்ளையவர்கள் நின்றாலும், இருந்தாலும், கிடந்தாலும், நடந்தாலும், மென்றாலும் துயின்றாலும் விழித்தாலும் இமைத்தாலும் ஆலயப் பணியிலேயே கண்ணுங் கருத்துமாக இருப்பது சைவ உலகம் செய்த பெருந் தவமேயாகும்.

இந்நூல் வெளிவருவதற்கு ஊக்கத்துடன் ஆவன செய்த ஸ்ரீ K.M. இராசமாணிக்கம் ரெட்டியாரவர்கட்கும் சாது ஸ்வாமி அவர்கட்கும் இத்தகையபணியில் என்னை ஊக்குவிக்கும் திருக்குடந்தைச்சிவனடியார்திருக்கூட்டத் தலைவர் ப. தி. சோ. சிங்காரம் செட்டியாரவர்கட்கும் எனது அன்புகலந்த வணக்கத்தைச்செலுத்தி மகிழ்கின் றேன். இந்நூல் அச்சிடுங்கால் உடனிருந்துழைத்த நண்பர் தியாகராசனுக்கும், குமரன் அச்சகத்தினருக்கும் எனது நன்றி.

ஒன்றுக்கும் பற்ருச் சிறியேனை இத்தகைய பணியில் செலுத்தும் எல்லாம்வல்ல பன்னிருகைப் பெருமான் திரு வருளைச் சிந்தித்து வாழ்த்தி வணங்குகின்றேன்.

இங்ஙனம்
முருகனடிமை
வித்துவான், சு. சுவர்ணகாளீச்சுரன்



உ

சிவமயம்

ஸ்ரீலஸ்ரீ சம்பந்தசரணாலயத்தம்பிரான் என்னும்

கோவை வழக்கறிஞர், சிவக்கவிமணி

**C. K. சுப்பிரமணிய முதலியாரவர்களது**

# பாராட்டுரை

கும்பகோணம், நகராட்சி உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர் வித்துவான் சு. சுவர்ணகாளீச்சுர பிள்ளை அவர்களால் பதிப்பிக்கப்பட்ட "சிவபூசை அகவல்" என்ற நூலைப் பார்வையிட்டேன். அதுபோலவே அவர் பதிப்பித்த சைவானுஷ்டான அகவல் என்பதையும்பார்த்தேன்.

இச்சிவபூசை அகவலானது சைவ உலகுக்கு இன்றியமையாத சிறப்புடையது. சிவபூசை அங்கங்கள் எல்லாவற்றையும் ஒன்றுவிடாமல் விரித்துக்கூறுவது. இதனை மனப்பாடம் செய்தால் சிவபூசை முறைமுழுதும் மனதில் வந்துவிடும். இந்நூல் ஞானப்பிரகாச பட்டாரகர் அருளியதென்று பழய பதிப்பிற் காண்கிறது. அப்பதிப்பு ஏறக்குறைய 60 ஆண்டுகட்குமுற்பட்டது. இவ்வாசிரியர் தருமைகுரு முதல்வருக்கு ஆச்சாரியர் என்றும்தெரிகிறது. இவ்வாறு பரம்பரையில் பெரியார் வழிவந்து சிவாகம

சாரமாயுள்ளநூல். இதனை இந்நாளில் சிவபூசை செய்வோருக்கு உபகாரமாக இதன் பதிப்பாசிரியர் திரு அச்சிறுபாக்கம் அறுபத்துமூவர் கும்பாபிடேக நன்னாளில் வெளியிட்டுதவுவது மிகப் பொருத்தமாகும். இதன் பதிப்பாசிரியர் சிறந்த வித்துவானாகவும், சைவ நூல்களில் நன்கு பயின்றவராகவும் சைவசீலமுடையவராயும் உள்ளது பொருத்தமும் பெருஞ்சிறப்புமாகும். இவர் இவ்வாறு முன் பல நூல்களைத் திறமையுடன் திரட்டியுள்ளார். இவரது நன் முயற்சிகளும், இவர் பதிப்புக்களும், நூல்களும் நீடுவாழ்க என வாழ்த்துகின்றேன். இதனை அச்சிட்டு வெளியிட்டு உபகரித்த பெரியார் கூயப்பாக்கம் உயர் சைவத்திரு K. முத்துலிங்க ரெட்டியார் அவர்களும் எல்லா நன்மைகளும் பெற்று நீடுவாழ்க.

இங்ஙனம்,

சம்பந்த சரணாலயத்தம்பிரான்
என்னும்
கோவை வழக்கறிஞர் சிவக்கவிமணி
**C. K. சுப்பிரமணிய முதலியார்**

சேக்கிழார் நிலையம்,
கோவை
25—6—58






உ

செந்திலாதிபன் துணை

திருச்சிற்றம்பலம்

# திருவாரூர்

## ஸ்ரீ-ல-ஸ்ரீ ஞானப்பிரகாச பட்டாரகர் அருளிய

# சிவபூஜை அகவல்

### காப்பு

ஓசைச் சிவாகமத்தில் உள்ளபடி கண்டமைத்த
பூசைத் திருவகவல் போற்றவே—ஆசில்
பொருணயமும் சொன்னயமும் போதத்துணல்கக்
கருணைபொழி வாரணமே காப்பு.

### சூரிய பூஜை

### பூசோபகரணம்சேகரித்தல்

திருவுறு செல்வமுஞ் சிறந்தமெய்ப் புகழும்
பெருகுமெய்ஞ் ஞானமும் பெற்றிட வேண்டிப்
புத்திசேர் சூரிய பூசை புரிவோர்
அத்திர பஞ்சரத் தகத்தின ராக
மண்முத லாக மாயையீ றாக
எண்ணுதத் துவமனத்து இகலறக் கடந்தே
மிக்குள சுத்த வித்தையின் வடிவெனத்
தக்கதோர் பூசைத் தானத் தடைந்தே
கூறுப கரணம் குறைவற அமைத்தபின்

## சூரியசகளீகரணம்*

### சூரியகரநியாசம்

பூருவ முகமுறப் பூசை செயும்படி
அத்திர மந்திரத்து அங்கை புறங்கைகள்
சுத்திசெய் தத்தத் துணைதனைக் கூட்டி
மருவிய சூரிய மந்திர மதனால்
பெருவிரல் இரண்டும் பிணிக்க வுள்வைத்தே
இதயமந் திரங்கொண் டிணைப்பெரு விரல்களை
விதமுறு தர்ச்சனி விரல்களால் ஊன்றிச்
சிறுவிரல் முதலாய்ச் சிரஞ்சிகை கவசம்
உறுவிரல் மூன்றினும் உறப்பெரு விரலால்
நிசித்த வதற்பின் நேத்திர மதனால்
வசித்திரு தர்ச்சனி மத்திம மடக்கிப்
பெருவிரல் இணையாற் பிறங்குதர்ச் சனிகளை
மருவிய வத்திர மந்திரத் தியற்றிக்
கவசமந் திரத்தால் கரங்களைச் சுற்றி
அவனது மூலத்து அகங்கைகள் கூட்டிக்

### சூரியஅங்கநியாசம்

கரநியா சந்தனைக் கவின்பெற வியற்றி
உறமிக மூலத் துறுசுத்தி பண்ணித்
திதமுற மார்பு சென்னி சிகைகளில்
இதய முதலா வெண்ணுறும் மந்திர
மணிவிரல் முதலா யடையுமூ விரலாற்
பணிவுறு நியாசம் பண்ணிய தற்பின்

---

* அங்கநியாசம் கரநியாசங்களைச் செய்து தன்னைச் சூரியனாகப் பாவிப்பது.

களமுதற் றனுந்தங் காட்டுதர்ச் சனிகளை
வளமுறு கவச மந்திரத் தியற்றி
நாடிய தர்ச்சனி நடுவிரல் நிமிர்த்து
நீடுநேத் திரங்களி னேத்திரங் கொடுத்தே
ஆர்த்திடு மந்திரத் தனுமிகை களினால்
ஏற்றிடுங் கைத்தலம் இரண்டினும் ஊன்றி
அசைவுறு மத்திரத்து அங்கைகள் கொட்டித்
திசைதொறுஞ் செய்து திக்குபந் தனமுங்
கவசங் கொண்டு கருதுதர்ச் சனியால்
அவகுண் டனஞ்செய் தாகமெங் கும்உற
முந்திய சூரிய மூலமந் திரத்தாற்
சிந்தைகொண் மாகமுத் திரையுங் கொடுத்தே
நேரி யாங்கரி யாசத் தாற்றனைச்
சூரியன் றனது சொரூபம தாக்கிப்

## சூரியதர்சனர்க்கியம்

பைமணிச் சென்னிறப் பாத்திரந் தன்னில்
செய்மலர் முதலாத் திரவியம் பொருந்திச்
செழும்புனல் நிறைத்த தரிசனர்க் கியத்தை
முழந்தா ளூன்றி முடியள வெடுத்து
மூலமந் திரத்தால் முன்னுறக் கொடுத்தே

## சாமான்ய அருக்கியம் முதலியன

மாலற வவன்றன் மந்திரஞ் செபித்தே
அத்திர சுத்திசெய் தமர்ந்தபாத் திரத்தில்
வைத்திடு கடோர்க்க மந்திர மதனால்
மென்னுத லருண விந்துவி னமுதென
தன்னிகர் பரிமளத் தண்புனல் நிறைத்தே

அருணன் மூலத்துடன் அங்கம்ஆறு அமைத்து
கருணையோ டத்திர கவசமந் திரங்களில்
திக்குபந் தனத்துடன் திகழவ குண்டனம்
தக்கவா றியற்றித் தரணிமூ லத்தால்
முன்னிய தேனு முத்திரை கொடுத்தபின்

### சுத்தி

தன்னையும் பூசைத் தானத் துடனே
உளம்பெறு பூசை உபகர ணங்களைத்
துளங்குமந் திரங்கொடு சுத்தி புரிந்தே
தாங்கெழிற் பூசைத் தானந் தன்னை
ஓங்குமத் திரம்பயி லொருமலர் தன்னால்

### தண்டிமுதலோர் வழிபாடு

சுற்றிவிக் கினம்பல துருசற விடுத்தபின்
நற்றிய வேதிகை நடுவுற வமைத்திடுஞ்
செம்பொனு திகளில் செய்திடும் எட்டிதழ்
அம்புயந் தன்னில் அருச்சனை செயும்படி
வனப்புறு நிருதி வாயு ஈசானம்
அனற்றிசை என்னும் அடைவுநாற் றிசையினும்
பெருக்குறு தண்டி பிங்கலன் கணபதி
குருக்களிங் கவர்தமைக் குணம்பெறச் சாத்திப்

### ஆசன பூஜை

புகல்நடு விற்பிர பூதா சனந்தனை
அகமகிழ்ந்து அர்ச்சித்து அனற்றிசை முதலாய்த்
தருமெழில் விமலன் சாரனு ராத்தியன்
பரம சுகனெனும் பாதசிங் கங்களும்
பன்னுபீ டந்தனில் பத்மா சனமும்

பொன்னலர் கொண்டு பூசனை செய்தபின்
கீழ்த்திசை யிதழ்முதற் கிளரிதழ் எட்டினும்
ஈட்டிய கன்னிகை யீசா னத்தினும்
மொய்த்திரு தீப்தை முதலாம் ஒன்பது
சத்திகள் தம்மையும் தகைபெறச் சாத்தி
விற்புற முத்திரை விதமுறக் காட்டி
அற்புத மலர்நடு வர்க்கா சனத்தையும்
திருந்திட வருச்சனை செய்தாங் கதன்மேற்

### சூரியமூர்த்தி தியானம்

பரந்திடு வெண்ணிறப் பங்கயா சனமும்
சென்னிற மண்டலந் திகழ்திரு மேனியும்
தன்னிரு கரத்து வெண்டா மரைமலர்
ஒருதிரு முகத்தொளிர் உபயலோ சனமும்
அருணவா டையும்பயில் அருணன் வடிவினைக்
கருத்துற நினைந்து கடோர்க்கமந் திரத்தால்
இருத்திய பின்னர் இருவிரல் கொண்டே

### ஆவாகனம்

நேத்திரங் கொடுத்து நிறைதரு மலர்கள்
ஆர்த்தவஞ் சலியில் அருணவிந் துவினுங்
கரந்தனில் வாங்கிய கதிரவன் றன்னை
வரந்தரு மூல மந்திர மதனால்
மெய்தரும் இதய மீதில் [1]ஆவாகனஞ்
செய்து [2]தாபனத்தொடு சிறந்த [3]சன்னிதானஞ்

---

1 சிவபிரானை அருளினால் அறிந்து அதில் அழுந்திநிற்றல்.
2 அவ்வாறு அழுந்தி நிற்றலை நிலைபெறச் செய்வது
8 சமீபித்த சம்பந்தம்

[1]சன்னிரோ தனமிவை தகைபெற வியற்றி
முன்னிய விம்ப முத்திரை காட்டித்
தருமெழு னேத்திரந் தவிர(அ)ஞ் சங்கமும்
உரமுதற் கராந்தம் உறநியா சம்பணி
மிக்கமூ லத்தால் விருப்பொடு கூட்டித்
[2]திக்குபந் தனத்தொடு [3]செய்தவ குண்டனம்
ஆர்த்தமூ லத்தால் ஆவின்முத் திரையொடு
சேர்த்திடு மகாமுத் திரையுங் கொடுத்தே
முறைபுகழ் கடோர்க்க மந்திர மதனுல்
அறுகல ரரிசி யடைவுறச் சாத்தி
மருவிய கடோர்க்க மந்திர மதனுல்

## அபிடேகம்

கருதிய வெண்ணெய்க் காப்புமாக் காப்பிவை
அடைவினி லளித்தாங் கபிடே கித்தே
படைசெவ் வாடை புனைந்தவை நினைந்தே
சந்தனங் குங்குமந் தாமரைப் போதொடு
செங்தொடை மலர்பல சிறந்திடச் சாத்திச்

## சூரிய லயாங்கபூசை

செங்கதிர் மந்திரஞ் செபத்தொடு முக்கால்
அங்கெதிர் புஷ்ப வஞ்சலி செய்தே

---

1 பூசிக்கும்வரை நீங்காதிருக்கச் செய்தல்.

2 சிவமுகங்களிலிருந்தும், இருதயாதி ஸ்தானங்களிலிருந்தும் உண்டாகும் ஒளியை உருவகப்படுத்த கவசமந்திரத்தால் சுற்றுதல்.

3 மேற்சொல்லிய ஒளியில் அசுத்தமாகிய புறவொளி விரவாது தடுத்தல்.

கொண்டிரு மருக்கியங் கொடுத்த வதற்பின்
முண்டக விம்ப முத்திரை காட்டித்
திருந்துமங் கங்களைத் திருமேனி யிலுறப்
புரிந்துல யாங்க பூசனை புரிந்தே

## சூரியபோகாங்கபூசை

கூறில யாங்கங் கொடுத்திட வாங்கிச்
சீரிதயஞ் சிரஞ் சிகைகவ சங்களை
யிருமைகொ ளங்கி யீசன் திசையுடன்
நிருதிவா யுக்களில் நிறைபெறச் சாத்தி
இலங்குநேத் திரங்கதி ரெதிர்பெறச் சாத்தி
நலங்கொள்கீழ்த் திசைமுதல் நாற்றிசை தன்னினுந்
தருகிய வத்திரந் தன்னையுஞ் சாத்தி
இருதய முதனான் கிசைந்திடு நேத்திர
மேவுமந் திரமென விளங்குமூ வகைக்குங்
கோவின்முத் திரையொடு கோவிடா ணமெனும்
முத்திரை திராசனி முத்திரை எனுமிவை
அத்தகு மவைகளை அடைவினிற் கொடுத்தே
முன்னிய கீழ்த்திசை முதலிதழ் எட்டினும்
தன்னிகர் சோமன் றனைமுத லாகக்
கேதுவீ றான கிரகம் எட்டினையும்

## தூபதீபம்

ஓதிய அடைவினில் உறைந்திடச் சாத்திக்
கரந்தனி லுறுநமஸ் காரமுத் திரையுடன்
அருந்துநல் லருக்கியம் அவர்தமக் குதவிப்
படைக்குநை வேத்தியம் பானியத் துடன்
அடைக்கா யமுதும் அருணனுக்கு உதவித்

திகழ்தரு தூபந் தீப முதலாந்
தருமுப சாரந் தந்த வதற்பின்

### ஆசமனார்க்கியம்

அன்புடன் ஆசம னார்க்கியம் கொடுத்தே
முன்புறச் சூரிய மூலமந் திரந்தனை
இயன்றன செபித்தபின் இரவிக்கு உதவிப்
பயின்றிடு தோத்திரம் பற்பல கூறி
யுன்னியட் டாங்க முறமே தினியிற்
பன்னிரு காலும் பணிந்துட னெழுந்தே
மாசறு கடோர்க்க மந்திர மதனால்

### பராமுக அர்க்கியம்

ஆசறு பராமுக அர்க்கியம் கொடுத்தே
தேவனே சிறியேன் செய்திடும் பிழைகள்
யாவையும் பொறுத்தரு ளெனமுறை வணங்கித்
தயங்குமா றங்கந் தனைமுத லாக
வயங்கிய பல்வகை மந்திரத் தொகையினை
அத்திர மந்திரம் அமர்ந்த நாராச
முத்திரை கொண்டு முறைமையில் எழுப்பி
முற்பயில் கடோர்க்க மூலமந் திரத்தால்
எற்பயில் சூரிய னிடந்தனிற் கூட்டி
உதயமார்த் தாண்டனை உத்துவா சனஞ்செய்து
இதய மனத்தில் எழுந்தரு ளப்பணி
யினிதமர் வேதிகை யீசா னத்துத்

### தேசச்சண்டர் பூசை*

தனியெழிற் றேச சண்டன் றன்னையும்
ஆதன மூர்த்தி யவன்றன் மூலத்தாற்
போதவை கொண்டு பூசனை புரிந்தே
அடுத்திடு பாத்திய ஆசம னார்க்கியம்
கொடுத்துநின் மாலியம் குறைவிலா நைவேத்தியம்
அவமதி யின்றி அடைக்கா யுடன்பல
உபகர ணங்கள் உதவிய பின்னர்
வருந்து வினைகெட வணங்கி யுத்யாபனம்

### பூசையின் பயன்

புரிந்திடு சூரிய பூசையின் முறைமையை
நலம்பெறக் கற்பவர் நயப்போடு கேட்பவர்
நிலம்பெறு புகழொடு நீடுவாழ் பவரே.

சூரியபூசை முற்றிற்று.

---

உ

# சிவபூசை

பூங்கம லத்தயன் புண்டரீ கக்கணன்
ஈங்கிவர் காணரும் இலிங்கம தாகிய
சங்கரன் றனையலர் சாத்துதல் புரிவோன்
அங்கவன் றென்பா லாசனத் திருந்தே

### சாமான்ய அர்க்கியம்

ஆசமனஞ் செய்து அருங்கர நியாசமும்
நேசமோ டங்க நியாசமும் செய்தே
பாத்திர மத்திர பரிசுத்தி செய்தே
ஏத்திடும் இதயத்து இரும்புனல் நிறைத்தபின்
ஓமெனும் மந்திரம் உச்சரித்து எழுகாற்
சாமானி யார்க்கியந் தனையருச் சித்தே

---

* த்வனி சண்டர்பூசையுடன் சேர்த்துசிவபூசையின் இறுதியில் செய்தலும் மரபுஆகும்.

### துவார பூசை[1]

திக்குபந் தனுதி செய்தாங் கதனுற்
தக்க துவாரந் தனைச்சுத்தி செய்தே
கீழ்த்திசைத் துவாரங் கிளருமேற் படிமிசை
வாட்டமில் வடபால் வாரண முகனையும்
தாங்குறு தென்பாற் சரஸ்வதி தன்னையும்
ஈங்கிவர் நடுவில் இலக்குமி தன்னையும்
அந்தவா யிலின் வடக்கு (அ)டுத்ததென் புறங்களில்
நந்திகங் கைகளை நயப்புடன் சாத்தி
வாயிலின் தெற்கு வடக்கு(அ)டுத் திடவே
யேசின்மா காளன் யமுனையைச் சாத்திப்
பத்திசேர் சிவமபப் பார்வையி னாலும்
அத்திரந் தெறித்த பத்திரத் தாலும்
பாசுப தாத்திரப் பாததா டனத்தினும்
ஏசில்வான் முதன்மூ விடையூறு தீர்த்துக்
கிளர்ந்திடு துவாரக் கீழ்ப்படி நடுவில்
துளங்கிய வத்திரத் துவாரபா லகனையும்
நீங்கரி தான நிருதியின் றிசையின்
பாங்குறு வாஸ்து பதியையுஞ் சாத்திப்
பொருந்திடு துவார பூசைசெய் ததற்பின்

### பூத சுத்தி[2]

#### சூக்கும தேகசுத்தி

பரந்திடும் அத்திர பஞ்சரங் கருதிச்
சோர்வற ஐவகைச் சுத்திசெய் திடவே
நேர்பட வருங்கர நியாசம தியற்றிப்
பாதப் பெருவிரற் பற்றியீ ருருவாய்
ஆதா ரத்தை அடைந்த வதற்பின்
உச்சி யளவும் ஒருரு வாகி
அச்சமில் இதய மாதியைந் திடத்தினும்
பிங்கலை யிடைகளின் பின்னனாற் றதோமுகப்

---

1 பூஜாஸ்தானத்தில் ரேசக பூரகவியாபாரங்களை அஸ்த்ரதுவார பாலகர்களால் தடுத்து மனத்தை நிறுத்துதல்

2 தத்துவங்களின்றும் நீங்குதல்

பங்கய முகிழப் பஞ்சகம் பொருந்திய
சுழிமுனை தன்னிற் றுளையிடத் தமுதம்
பொழிதரு சத்தியின் பூரண நிறைந்தே
ஊங்கா ரத்துடன் உள்ளே வாயுவை
வாங்கி நிறுத்தி மறித்துமே நோக்கி
அம்புய முகைகள் அலர்ந்துமே நோக்க
உம்படென் றேதெறித் துற்றசோ டிகையால்
மாருதந் தன்னை வலத்தினில் விடுத்துப்
பூரக கும்பகம் புரிந்து மீளவும்
சீருறும் இதயச் செழுந்தா மரையிற்
தாரகை போலத் தகைபெற விளங்கிய
அம்மெனும் எழுத்தாம் ஆன்மா வதனைச்
செம்மை ஊங்காரச் சிகையினில் ஏற்றி
அழுந்திய வாயு வதனைமே நோக்கும்
ஒழிந்த சங்கார முத்திரை யதனால்
அவாவி ஆன்மாவை ஆன்ம மந்திரத்தால்
துவாதசாந் தத்திற் சோதியிற் கூட்டிச்
சத்தப் பரிசஞ் சதுர்முக னிடத்தினும்
எத்திய இரதம் விண்டுவி னிடத்தினும்
உருவங் கந்தம் உருத்திர னிடத்தினும்
அருவுரு புந்தியோ டாங்கா ரந்தனை
மகேச னிடத்தினும் மனோவிந் துக்களைத்
தகாமல மொழிக்குஞ் சதாசிவ னிடத்தினும்
ஐவர் இடத்தினும் அவைசென் றொடுங்க
செய்வது சூக்கும தேகசுத் தியதாம்

## ஸ்தூல சுத்தி

உடலினிற் தனித்தனி ஓரைம் பூதம்
அடைவுறக் குணம்வடி வனைத்தையும் நினைந்தே
மருவிய வாயுவை வாங்கி நிறுத்தி
விரவமே நோக்கி விடுத்திடும் போதில்
இறைஞ்சிய நிவிர்த்தி யிலாமெனும் எழுத்தை
அறைந்துமண் ணின்குணம் ஐந்தையு நீக்கி
உவந்திடு பிரதிட்டையி னுவீமெனு மெழுத்தை

நவின்று நீரின் குணம் நான்கையும் நீக்கி
ஒழிந்தபின் வித்தையின் உருமெனும் எழுத்தை
மொழிந்தன லின்குணம் மூன்றையு நீக்கி
அடுத்திடு சாந்தியின் ஐமெனும் எழுத்தை
எடுத்துரைத் ததன்குணம் இரண்டையும் நீக்கிச்
சாந்தியா தீதந் தனிலவூ மெனுமெழுத்து
ஓர்ந்துரைத் ததன்குணம் ஒன்றையும் நீக்கி
மண்முத லைந்தையும் வாயு வனல்புனல்
திண்ணமே தினியொடு சிற்பரா காசம்
இவைகளி னாலடர்த் திட்டபின் மேனியை
அவையவை யின்வடி வாக நினைந்தே
மறம்பொரு மத்திர மந்திர மதனால்
பிறங்கிய வலக்கால் பெருவிரல் தன்னில்
ஊக்கம தாக உதித்தவெங் கனலால்
ஆக்கையின் குற்றம் அனைத்தையும் அடர்த்தே
உறுமல பந்தம் ஒழிந்தொரு வெளியாய்ச்
சருவசூ னியமாம் தன்மையை நினைந்தே
உய்த்திடு நாடிகள் உள்ளும் புறம்பும்
சத்தியின் அமிர்த தாரையால் நனைந்தே
அகார உகாரம் அதனோடு மகாரம்
பகாத பிரணவப் பாவனை யதனாற்
சித்த மாகிய செழுந்தா மரையிற்
சுத்தவித் தையெனும் துலங்கும் ஆதனத்தில்
அம்முதல் விந்து வளவா நாற்கலைச்
செம்மைய தாகத் திகழ்பிர ணவத்தால்
இலயத் தானத்து இழிந்தசூக் குமஉடல்
நிலைபெற வந்து நிகழ்ந்தமை கருதி
ஐங்கலைப் பிரணவ ஆத்மமந் திரத்தாற்
பொங்கிய வாயுவின் பூரகத் துடனே
சூக்கும உடலிடைத் துவாதசாந் தத்தினு
நீக்கியான் மாயை நிலைபெற வைத்தே
அருள்பொழி யமுதால் அபிடே கித்தே
நிரைதரும் அங்க நியாதஞ் செய்திடச்

சூக்கும சுத்தி தூலசுத் தியெனும்
ஆக்கையின் சுத்தி ஆத்மசுத் தியதாம்

### அந்தர்யாகம் (உட்பூசை)

எண்ணிய முக்குணத் திருநிறஞ் செம்மை
வெண்ணிற மண்டில மீமிசை பயின்ற
நாபிகந் தந்தனி னுவிரண் டங்குல
மேவிய னுளமிசை வெண்ணிறம் பயில்
போதமாம் எட்டிதழ்ப் புண்டரீ கத்துறை
சோதிலிங் கந்தனிற் றுவாதசாந் தத்தினும்
ஆவா கனஞ்செய் தமலனை மஞ்சனம்
பூவாதி யாற்புறம் போலருச் சித்து
விந்துவின் அமுதால் மெய்ஞ்ஞா னுக்கினி
உந்திக் குண்டத்து ஓமம் புரிந்தே
வியன்றரு பூசனை வேள்வியின் உள்ள
பயன்றனை முழுதும் பரமனுக்கு அளித்துப்
புருவ நடுவினிற் பொங்கொளித் தாரகை
உருவுறு சோதியை உறநினைந் திருந்தே
புறம்பினும் என்பாற் பூசைகொண் டருளென
அறம்பெற வேண்டி அனுமதி பெற்றிடும்
அந்தரி யாகமும் ஆன்ம சுத்தியும்
இந்த முறைமையில் ஈசனுக்கு இயற்றி

### *தானசுத்தி

தக்கதோர் பூசைத் தானந் தன்னை
விக்கின நீக்கி வியந்தகாப் புறவே
பத்திர மந்திர மதுகொடு முக்காற்
கைத்தலந் தட்டி கண்டவெண் திசையினுந்
திக்குபந் தனமுஞ் செய்தத் திரத்தால்
அக்கவசத் தாலவ குண்ட னத்துடன்
மெத்திய நீரொடு மேலு நிறைந்திடு
சத்தியின் சூழவுறச் சத்திமந் திரத்தால்
தேனுமுத் திரையுஞ் சீர்பெற வியற்றித்
தான சுத்தி தன்னையும் புரிந்தே

---

* மாயையைக் கடந்து நிற்றல்

## *விசேட அர்க்கியம்

மருக்கமழ் பாத்திய மருவுமா சமன
மருக்கிய மூவகைக் கமைத்தபாத் திரங்களை
பத்திர சுத்திசெய் தங்குசத் தமுதம்
வைத்திடும் இதய மந்திரத் தமைத்தே
நாலா றெட்டெடன நவிற்றிர வியங்கள்
ஏலா தொழியின் இசைந்த சந்தனமுடன்
தணந்திடா தறுகு தண்டுல நறுமலர்
அணைந்த பாத்திய முதலாகிய மூன்றினுள்
பொருவிலா றங்கம் பொருந்துபாத் தியமும்
பிரமமா றங்கம் பிறங்கா சனமும்
தீதற வமைத்தபின் திகழர்க் கியந்தனை
ஆதன மூர்த்தி ஐமுக மந்திரஞ்
சீலமாம் வித்தியா தேகநேத் திரமுடன்
மூல மிதய முடிசிகை கவச
மத்திர மூலம் அடைவுமந் திரங்களிற்
புத்தலர் கொண்டு பூசனை புரிந்தே
யிவ்வகை மூவிடத் திசைந்தபாத் திரங்களில்
அவ்வவ் மந்திரத் தபிமந் திரித்தே
திக்கு பந்தனுதி தேனுமுத் திரைதரும்
அர்க்கியந் தனைக்கொண் டத்திர மதனுல்

## திரவிய சுத்தி **

தன்னையும் பூசைத் தகுதிர வியங்களோடு
இன்னியல் சுத்தி யியற்றிமீண் டவைதனை
அறைந்திடு கவசத்து அங்கையால் மூடிச்
சிறந்திட வபிமந் திரித் திதயத்தால்
அழுந்திடுங் கவசத் தவகுண் டனத்துடன்
மொழிந்திடு தேனு முத்திரை கொடுத்தபின்
சுத்திநால் வகைசெயும் தோயகும் பத்துடன்

* இது சிவபெருமான் ஒருவருக்கே உரியது
**திரவியங்கள் எல்லாம் மாயையினின்றும் உண்டாயின ஆகையால் சிவசத்தி பதிந்த அருக்கியநீரால் திரவியங்களைச் சுத்திகரிக்க, அவைகள் சிவனுக்குப்பயன்படும். மேலும் எல்லாம் சிவமாகக் காணுதல் என்னும் தத்துவமும் அமைந்தது.

ஸ்த்திர முத்திர மந்திர மதனால்
முந்துறக் கழுவி மொழிந்திடும் இதய
மந்திரங் கொண்டு வடித்தெடுத் தமைத்தே
ஆர்த்தமஞ் சனந்தனை யருக்கியந் தன்னில்
தோய்த்திடு மலரால் சுத்திசெய் திப்படி
யுன்னிய பூசையின் உபகர ணம்பல
துன்னிய திரவிய சுத்திசெய் ததற்பின்

### மந்திர சுத்தி*

தன்னு தனத்திற் றகுஞ்சிவா தனத்தையு
முன்னிய மார்பினின் மூர்த்தி தன்னையுஞ்
சாத்தி நெற்றியிற் சந்தனத் திலதமிட்
டேத்தியொண் மலர்கொடு இசைந்த மூலத்தால்
சிரந்தனி லருச்சனை செய்தே சிவமயம்
பொருந்திடத் தன்பாற் பூசனை புரிந்தே
மாசறு நாவினில் வருபிறப் பிறப்பெனும்
ஆசூ சங்கெட அனைத்துமந் திரங்களும்
உற்றநா தாந்தத்து உள்ளொளி பொருந்தச்
சொற்ற மந்திர சுத்தியும் புரிந்தே

### இலிங்க சுத்தி○

தரித்திடு மனந்தன் றருமஞ் ஞானம்
அருத்தி வைராக்கி யமைசுவரி யத்துடன்
ஏசறு பத்மம் எனுஞ்சடுத் தாசனம்
பூசனை செய்து புதியவெண் டுகில்புனை
மிருதுமெழின் மஞ்சன வேதிகை தன்னிற்
தருசிவ லிங்கந் தனையுற விருத்தி
முந்திய வாதன மூர்த்தி மூலஞ்
சிந்தைகொ ளிதயஞ் சிரஞ்சிகை கவசம்
அத்திரம் இவையால் அட்ட புஷ்பமுஞ்
சுத்திசெய் தருக்கிய தூபதீ பங்கொடுத்து

---

* சிவபூஜா மந்திரங்களை அருள்நாத ஒலியில் எழுந்தனவாகச் சிந்தித்தல்.

○ எட்டுமூர்த்திகளையே திருமேனியாகக் கொண்ட பெருமானை இவ்வெட்டு மூர்த்திகளைக் கடந்தும் லிங்கருபத்தில் எழுந்தருளி இருப்பவனாகக் கருதல்.

ஆய்ந்தவத் திரத்தா லகற்றுநின் மாலியம்
போந்திடு தண்டிதன் பூசனைக் கமைத்தே
அமைதரு தூபநீ ராட்டியதன் பின்
கமழ்தரும் எண்ணெய்க் காப்புமாக் காப்பு
மஞ்சள் நெல்லி வழுவறச் சாத்திப்
பஞ்ச கௌவியம் பஞ்சா மிர்தமிவை
ஆடி அருளியதன் பின்னெய் யாட்டி
நீடிய இளவெந் நீராட் டியபின்
வில்வபத் திரந்தனை விரவமத் தித்து
நல்லகர்ப் பூர நறுந்துகள் திமிர்ந்தே
விருப்புறு செழும்புனல் வெண்டயிர் செந்தேன்
கருப்பஞ் சாறுபாற் கனிச்சா றிளநீர்
அஞ்செழுத் தாலிவை யபிடே கித்தே
விஞ்சிய முடிக்கலர் விடாது புனைந்தாங்கு
இடையிடை தூயநீ ரிசைநறுந் தூபப்
புடைபயி லட்ட புஷ்பமுஞ் சாத்திப்
பொருந்திய குச்சுப் புற்கவ சத்தால்
பரிந்துசாத் தியபின் பதாகைமுத் திரையால்
அதிகமா மூலத் தைமுறை யாட்டித்
பதினொரு மந்திரம் பகர்ந்தினி தாட்டி
மிகுந்திடும் வியோம வியாபிமந் திரத்தாற்
சகத்திர தாரைத் தண்புன லாட்டித்
தண்ணறும் புனலொடு சந்தனக் குழம்பும்
நண்ணிய பனிநீர் நயப்புடன் ஆட்டித்
தவலறு சுகந்த சந்தன திகள்பயில்
நவகல சங்கள் நயப்புடன் ஆட்டி
யிங்கிப் படிச்செய் திதயமந் திரத்தாற்
சங்கத் தருக்கியத் தண்புன லாட்டி
யாசறு திருவொற் றுடையுஞ் சாத்தி
யீசனை பீடத் தெழுந்தரு ளப்பணி

ஐங்கரன்-திருமகள்-சப்தகுரு

மன்னுமைங் கரன்றனை வாயுகோ ணத்தினு
முன்னுசெந் திருவினை உத்தர திசையினும்
அத்தகு பீடத் ததைசா னியத்திற்

சத்த குருக்கள் தம்மையும் அடைவே
திரம்பெறச் சாத்தித் தென்திசை முகமுற

**சிவாசன பூசை***

பிறங்கிய விலிங்க பீடத் தின்கீழ்
ஆதார சத்தி அனந்தா சனத்தொடு
மீதா மனந்தனை மிசையுறச் சாத்திப்
பெருந்தகை யுறுமணிப் பீடக் கால்களில்
திருந்திய வங்கி திசைமுதல் நான்கினும்
தரும முதனன் கருகுறச் சாத்தித்
திருமரு வியகீழ்த் திசைமுதல் நான்கினும்
உறைதரு வதன்ம முதனுன் கமைத்தே
யுறையதச் சதன மூர்த்துவச் சதனம்
ஏதமில் நிருதி ஈசனிற் சாத்தி
மீதமா கந்தம் பீச மங்குரம்
தன்மை நாளந் தாதுகன் னிகைவிதை
பன்மை யுறுப்புறு பத்மா சனத்தையுந்
தீமையிற் கேசரஞ் செறியித ழெட்டினும்
வாமை முதலெண் வகைச்சத் திகளுடன்
இடமுறு கர்ணிகை யீசா னத்திற்
தடமுலை மனோன்மணி தன்னையுஞ் சாத்தி
யிதழ்நுதி வட்டத் திரவிமண் டலத்தையும்
அதன் அதிபதியாம் அயனையும் சாத்தி
நுண்டரு கேசர நுதியினின் மதியின்
மண்டலந் தன்னொடு மாயனைச் சாத்தித்
தாங்கிய கர்ணிகை தகுநுதி வட்டத்து
ஓங்கநன் மண்டலத்து உருத்திரன் றனையும்
தயங்குகர் ணிகைநடுச் சத்திமண் டலத்து
ஐயங்கதி பதியா மகேசன் றனையும்
சிவாதனந் தனையுஞ் சிவமூர்த் தியையுந்
தவாததன் மீதிற் சாத்திய பின்னர்

---

* பிருதிவிமுதலிய தத்துவங்களைக்கடந்த பெருமானை ஆன்மாக்களுக்கு அனுக்கிரகிக்கும் பொருட்டாய் தத்துவங்களை அதிட்டிக்கச் செய்தல்,

## தியானம்

சிரமுதற் பதாந்தந் தெண்டபங் கியினால்
முரணில் ஈசான முதலியா சம்பணிச்
சத்தியோ சாதந் தனைமுத லாகப்
பத்திசேர் முண்ட பங்கியும் அமைத்தே
பங்கயா சனமும் பானிற மேனியும்
பொங்கர வமைத்த பொற்புரி நூலும்
தெண்கலை வெண்பிறை திருமுடி யைந்துங்
கண்கள்மூ வைந்துங் கரங்களீ ரைந்தினின்
மலைதரு சூலம் வச்சிரங் கதிர்வாள்
கொலைமழு வபயங் கொண்டு வலப்பால்
அரவொடு பாச மதிர்மணி வெங்கனல்
விரவிய வங்குச மேவி இடப்பால்
உறைந்திடுஞ் சதாசிவ உருவினை நினைந்தே
சிறந்திடும் வித்தியா தேகமா வாகித்து
அடுத்த திருமுகம் ஐந்தினும் நேத்திரங்
கொடுத்தபின் நறுமலர் கொண்டவஞ் சலியால்
உருத்திடு தினகர வொளிபயில் பிரணவ
மதித்திடு மூல மந்திரம் அதனாற்
சுழுமுனை ஒலியொடு துவாதசாந் தத்து
எழுமொரு சோதியை யிறக்கி விந்துவிற்
சந்திர கோடி தருமொளி கரத்தில்
வந்திடப் பிராண மார்க்கந் தன்னிற்
சத்தியோ சாதந் தன்னிலா வாகித்து
அத்தகு வாம மாதிமூன் றாலுந்
தாபன சந்நி தானசன் னிரோதன
மேவிடக் கொடுத்தே விமலனைச் சுவாகதம்
அன்பொடு வினவி அருள்பெற்று அகிலமும்
இன்பொடு காக்கும் இறைவநான் உன்னைச்
செவ்விய பூசை செய்திடும் அளவும்
இவ்விலிங் கத்து இருந்தருள் என்றே
இறைவனை வேண்டி யீசா னத்தால்

அறைதரு சுவாகத அருக்கியம் கொடுத்தே
சித்தமா மிதையஞ் சிரஞ்சிகை கவசம்
அத்திரம் உரமுதல் அங்கையி றமைத்தே
யேற்றமூ லத்தா லேகத்துவம் பெறச்
சேர்த்திரு கரத்தாற் திக்குபந் தனமுடன்

அவகுண் டனஞ்செய் தாவின்முத் திரையுடன்
சிவனெதிர் மகாமுத் திரையுங் கொடுத்தே
கதிதரு காளகர் ணிகையி லிங்க
முதிர்நம ஸ்கார முத்திரை தன்னுடன்
முறைதரு மைம்முக முத்திரை காட்டி

அறைதரு பாத்திய ஆசம ஞர்க்கியம்
ஆலமுண் டவனுக் கலரறு கரிசி
மூலமந் திரத்தான் முறைபெறச் சாத்தித்
தூயமூ லத்தாற் றூபமும் கொடுத்தே
யாயவா சமனம் அருக்கியம் உதவி

## பாவநாபிஷேகம்

நிருத்தனுக் கெண்ணெ நெல்லிமாக் காப்புக்
கருத்தினு லடைவுறக் கருதியாட் டியபின்
ஆர்த்திடும் அருக்கியத் தபிடே கித்தே
பாத்திய முதலன பரிவுற நல்கி
மருவுநுண் டுகிலான் மாற்றிய பின்னர்

தருபல சுகந்த சந்தன மறுகு
வில்வ மலரொடு வியங்கொளா பரணம்
நல்லபொற் றுகின்மன நயப்பொடு சாத்தி
முன்புறத் தத்துவ மூவகை மந்திரத்து
அன்புறப் புட்ப அஞ்சலி செய்தே

சூட்டி யிண்டை தொடைநறு மாலை
யாட்டி யொலிமணி யத்திர மதனுல்
தேசுறு தூப தீபமுங் கொடுத்தபின்
ஆசம னத்துடன் அருக்கியம் கொடுத்தே
முந்திய மனோரத முத்திரை காட்டி

### [1] லயாங்கபூசை

ஐந்து பிரம அங்கமா றென்னும்
இங்கிவை லயாங்கத் தெழில்பெறச் சாத்திப்

### போகாங்கம் (ஆவரணபூசை)

பொங்கு போகாங்க பூசனை புரிதற்கு
ஆதர வியம்பி அனுமதி பெற்றே
ஓதுமூ லத்தால் ஒருமலர் சாத்திக்
கிளர்ந்தவீ சானங் கிழக்கொடு தெற்கு
விளங்கிய வடக்கு மேற்றிசை இவைகளின்
மொழியு மீசான முதலோ ரைந்தையும்
பொழிநறு மலராற் பூசித் ததற்பின்
இயலுறு நேத்திர மீசன் றிசையினும்
அயலுறு விதயம் அங்கித் திசையிலும்
ஈசா னத்தி லெழில்சிரந் தனையுங்
தேசார் நிருதியிற் சிகையது தனையுங்
காட்டிய வாயுவிற் கவசந் தனையுங்
கீட்டிசை தெற்குக் கிளர்மேற் குத்தரம்
அருந்திசை நான்கினும் அத்திரம் தனையும்
இருந்திடும் ஈசன் இலயாங்கந் தோறும்
அடைவினில் வாங்கி யத்திசை யிதழ்களின்
புடையுற விருத்திப் பூசனை புரிந்தே
ஆன அருக்கியம் அடைவினில் உதவித்
தேனு பத்மந் திரிசூ லத்தோடு
தூய மகர சுருக்குமுத் திரையிவை
யாயவீ சான மாதியைந் தினுக்கும்
செங்கரங் குவித்திடு சிறந்த முத்திரை
அங்கம் ஆறுக்கும் அடைவினில் அளித்துப்
புகலுமூ லத்தாற் புட்பவஞ் சலியும்
திகழ்தரு மகாமுத் திரையுங் கொடுத்தே
யீசனுக் கபேத மிவரெனத் தூபம்
ஆசம னத்துடன் அருக்கியம் அளித்தே

---

1 முக்தான் மாசிவனிடத்து ஒடுங்குதல்

## கௌரி பூசை

ஈசன் திசையில் இசைந்திடுங் கௌரியை
யாசன மூர்த்தி யாதியிற் சாத்தி
நானு விதந்தரு நைவேத் தியந்தனைப்
பானீ யத்தோடு பரிகல மேத்தி
நிகழ்தரும் இவைகளை நிரீக்கண முதலாந்
துகளறு நால்வகைச் சுத்தியும் செய்தே
திரமுறு கௌரிதன் செங்கையிற் கொடுத்தே
அரனைமூ லத்தால் அமுதுசெயப் பணிப்
பிரமாங் கங்களைப் பிரிவறக் கருதிப்
பரிகல மொன்றினிற் பரிந்தமு தளித்தே
ஆசமனங் கொடுத்து அங்கைகள் துவட்டி
வாசமொடு அடைக்காய் வகைபெற உதவித்
தந்திடும் அருக்கியந் தன்னொடு மூல
மந்திரங் கொண்டு மருமலர் சாத்தித்
தூபமு நால்வகைச் சுத்திநேத் திரந்தரு
தீபமுங் கொடுத்துத் திகழும் ஆசமனம்
அருக்கியம் உதவி யலரறு கரிசியிற்
றருக்கிய சருவ தத்துவா திபனெனப்
பகருமூ லத்தாற் பவித்திரஞ் சாத்தி
நிகரிலா லத்தியின் நிகழ்பரா சத்தியை
முன்னுற வாதன மூர்த்தி மூலங்கள்
அன்னவை சாத்தி அருக்கியம் கொடுத்தே
சுத்தி பொருந்திய தூபதீ பங்கொடுத்து
அத்தனை கவசத்து அங்கையாற் சுற்றி
மிருகமுத் திரையயில் வெண்ணீ றதனால்
அருகுறு முக்கால் அமலனை சூழ்ந்தே
எண்ணுமா லத்தி யிடந்தனி லுய்த்தபின்
அண்ணலுக் காசம னார்க்கியம் உதவி

### ஆராத்ரிகம்

நீறுகண் ணாடி நிகழ்குடை சாமரம்
மாறில்பொன் னால வட்டமும் விசிறியும்
அடைவினி லருக்கிய ஆசம னங்கள்

இடையிடை பொருந்த யியற்றிமூ லத்தால்
நாதமோ டெழுப்பிய நமோந்தமூ லத்தால்
ஆதியைப் புட்ப அஞ்சலி செய்தே
சித்திர மகாமுத் திரையுடன் ஐமுக
முத்திரை தன்னையு முறையுறக் கொடுத்தே
எய்திடும் அவருடன் இதயத் தருச்சனை
செய்திடும் செபவடம் செங்கையில் வாங்கி
நுவலுமூ லத்தால் நூற்றெட் டுருவினைப்
பவமகன் றிடச்செபம் பண்ணிய தற்பின்
கதமுறும் அத்திர கவசமோ டிதயத்து
இதயமுதன் மறித்து எதிர்சம் புடித்தே
அறிந்திடு மிரச்சை அவகுண் டனத்துடன்
செறிந்திட வலது செங்கையிற் பற்றி
அத்த நிறைத்த அருக்கிய முற்பவ
முத்திரை தன்னொடு முழ்ந்தா ளூன்றி

### ஜெபம்

உன்னருஞ் செபத்தை முற்றகன் மத்தையுந்
தன்னையும் வரதந் தனிலுறக் கொடுத்தே

### குருபீட பூசை

அங்கித் திசையில் அருள்குரு மூர்த்தியிற்
றங்கிய பரசிவந் தனையருச் சித்தே
நாடிய மேற்றிசை நண்ணிய யோக
பீடமேல் வித்தியா பீடந் தனையும்
பூசித் தரனையும் புட்பவஞ் சலியால்
நேசித் தவன்புகழ் நெஞ்சுறத் துதித்தே
அண்டனை வலஞ்செய்து அட்டாங் கம்உற
தெண்ட னிட் டிருகரம் சென்னிமேற் கூப்பி
கருத்துறு வுபய காலமா திகளில்
அருச்சனை புரிதற் கசத்தா மவர்தாம்
ஆசன மூர்த்தியோடு அரனைமூ லத்தால்
பூசனை புரிந்து போகாங் கங்களில்
நிறைதரு பிரம நேத்திராங் கங்களை

முறைதரு சந்தி முறைமையிற் சாத்திக்

### அக்கினிகாரியம்

கருத்தாம் அக்கினி காரியஞ் செய்தற்கு
உரித்தா மவர்செய் துடனிவே தித்தே
அட்டபுட் பங்கொடுத்து ஐமுக முத்திரை
சிட்டனுக் கன்பு சிறந்திட உதவி
சத்தியோ சாதந் தனைமுத லாக
மொய்த்தவை முடியினு மூலமந் திரத்தால்
பூசனை அருக்கியம் புரிந்த வதற்பின்
ஆசில்போ காங்க மவைதனக் கடைவே
சயம்பெறு மந்திரந் தனைமுத லாக
வியம்புமீ சானம் இறுதிய தாக
உற்றவ ருக்கியம் ஒருமையிற் கொடுத்தே
முற்றுநா ராச முத்திரை மலரால்
ஆர்த்தமந் திரங்கள் அனைத்தையும் எழுப்பி
மூர்த்தியிற் றிவ்விய முத்திரை கொடுசேர்த்து
அஞ்செழுத் தருச்சித்து அருக்கியம் கொடுத்து
வஞ்சனேன் பிழைகளை மனம்பொறுத் தருளெனத்
தொக்கபின் நினைந்து சோதிலிங் கந்தனைத்
திக்குபந் தனத்துடன் செய்தவ குண்டனம்
முன்கெழு தேனு முத்திரை கொடுத்தே

### பராமுக அர்க்கியம்

தன்குரு முதலோர் தமக்கும் பராமுகங்
கூர்த்த வருக்கியங் கொடுத்து விடுத்தே

### சண்ட பூசை

மூர்த்திசெய் ததற்பின் முனைமழுச் சண்டனே
ஆசன மூர்த்தி அவன்றன் மூலத்தால்
பூசனை செய்து புனைந்தநின் மாலியம்
தகைமைநை வேத்தியந் தான்முத லாயின
வகைபெறக் கொடுத்தவன் மந்திர மதனால்
செபித்து நிவேதனஞ் செய்திரு கரங்கள்
குவித்தடி யேன்செய் குறைபொறுத் தருளென

குலவிய வருக்கியம் கொடுத்து விடுத்தபின்
மலர்பயி லருக்கிய மந்திர மனைத்தையும்
நேர்பெற வாங்கி நெஞ்சகத் தமைத்தே
சோர்வினின் மாலியங் சுத்தியும் புரிந்தே
இருபதங் கழுவி யியற்றி யாசமனந்
திருநீ றணிந்து செய்து நியாசம்
ஓர்ந்திடு இருபத் தோருரு அகோரம்
சாந்தியின் பொருட்டுத் தகைபெறச் செபித்தபின்
மாசறு கபிலைக்கு வாயுறை கொடுத்துப்

**நூலின்வரலாறும் பயனும்**

பூசனை செய்திடும் பூசனை முறைமையைச்
சொற்றமி ழகவலில் சொல்ல வேண்டுமென
நற்றவன் உலக நாயகன் விளம்பச்
சிற்குண னுரைத்த சிவாகம நோக்கி
நற்கமலை யில்வாழ் ஞானப்பிர காசன்
சொல்லிய பூசைத் தொகையினைப் பழுதற
வல்லவர் வீடுற வல்லவர் தாமே.

சிவபூசையகவல் முற்றிற்று.



உ

திருச்சிற்றம்பலம்

சகமலாது அடிமை இல்லை தானலால் துணையுமில்லை
நகமெலாந் தேயக்கையால் நாண்மலர் தொழுது தூவி
முகமெலாங்கண்ணீர்வார முன்பணிந்து ஏத்துந்தொண்டர்
அகமலால் கோயில் இல்லை ஐயன் ஐயாறனார்க்கே.

---

காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி இலிங்கமாக
நேயமே நெய்யும் பாலா நிறையநீர் அமைய ஆட்டி
பூசனை ஈசனார்க்குப் போற்றவிக்காட்டினோமே.

திருச்சிற்றம்பலம்

குமரன் அச்சகம், குடந்தை.